இங்ஙனே பொருள் கூறினாலும் ஐக்யம் பொருந்திவிடுகின்றதன்றோ. காசக்ருத்ஸ்நர் சரீராத்மபாவத்தை அவலம்பித்தே ஐக்யத்தைப் பொருந்தவிட்டாரென்று ஏதுக்குச் சொல்லவேண்டும்? என்கிறார்கள் அத்வைதிகள். இது ஸமஞ்ஜஸமான வாதமன்று என்பதை இதோ நன்கு நிரூபிக்கிறோம்.

36. காசக்ருத்ஸ்ந மதத்தினுண்மை விளக்கம்.

*அத்தா சராசரக்ரஹணாத்* என்கிற உபக்ரமஸூத்ரத்தைக் கொண்ட அத்ரதிகரணத்தில் "குஹாம் ப்ரவிஷ்டாவாத்மாநௌ ஹி தத்தர்சநாசத்" என்கிற ஸூத்ரத்தில் த்விவசநாந்தமான ஆத்மாநௌ என்கிற சப்தத்தினால் பரஸ்பரபிந்ந ஸ்வரூபசாலிகளான ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு ஹ்ருதய குஹாப்ரவேசம் ச்ருதி ஸித்தமென்று தெரிவிக்கப்பட்டுள்ளது. இதனால் ஜீவ ப்ரஹ்மங்களுக்கு நிருபாதிகமான பேதமே ச்ருதிக்கு அபிமதமென்று ஸூத்ரகாரர் அபிப்ராயப்பட்டிருப்பது ஸ்பஷ்டமாகத் தெரியவருகிறது. ஆக ஜீவப்ரஹ்மங்களுக்கு ச்ருத்யபிமதமான ஸ்வரூப பேதம் பழுதுபடாதபடி நிர்வஹிப்பதுதான் ஸூத்ரகாரர்க்கு அபிமதமென்று இசைந்து தீரவேணும். ஏவஞ்ச, ஜீவப்ரஹ்மங்களுக்கு ஸ்வரூபைக்யத்தை யவலம்பித்து நிர்வஹிக்க வந்தது *அவஸ்திதேரிதி காசகருத்ஸ்ந:* என்கிற ஸூத்ரமென்று சொல்லுவது பொருந்த மாட்டாது.

37. முக்கியமாக நோக்கத்தக்க விஷயர்.

அவஸ்திதி: என்கிற சப்தமானது "பூதலே கட: அவதிஷ்டதே, ப்ராஸாதே தேவதத்த: அவதிஷ்டதே" இத்யாதி வ்யவஹாரங்களிற்போல ஒரு வஸ்துவில் மற்றொரு வஸ்து இருப்பதைத்தான் சொல்லக்கடவது: ப்ருதிவ்யாம் திஷ்டந் அப்ஸு திஷ்டந் தேஜஸி திஷ்டந் வாயௌ திஷ்டந் ஆகாசே திஷ்டந் ஆத்மநி திஷ்டன், இத்யாதிகளான உபநிஷத் வாக்யங்களில் பலகால் காணப்படுகிற ஷ்டாதாது ப்ரயோகத்தை அடியொற்றியே அவஸ்திதே: என்கிற ஸூத்ர ப்ரயோகமுள்ளதென்பதை ப்ராமாணிகர்களின் உள்ளம் அநாயாஸமாக க்ரஹிக்கும், ஆக காசக்ருத்ஸ்ந மதம் அத்வைதிகள் கூறுகிறபடி பொருந்தாது. ஏவஞ்ச, வாக்யாந்வயாதிகரணத்தில் விசிஷ்டாத்வைதமே ஸித்தாந்திகரிக்கப்பட்டதென்று தெளிவாயிற்று.



38. நாராயன பாரம்யப்ரதிபாதந-உபக்ரமம்

ஆக இதுகாறும் சாரீரக மீமாம்ஸா சாஸ்த்ரத்திற்கு அத்வைதத்தில் நோக்கில்லை யென்பதும் அத்வைத கண்டனத்தில்தான் முழு நோக்கு என்பதும் ப்ரஹ்ம ஸூத்ரங்களைக் கொண்டே நிரூபிக்கப்பட்டது. இனி, அந்த சாரீரக மீமாம்ஸா சாஸ்திரத்திற்கு நாராயண பாரம்யப்ரதிபாதனத்தில்தான் முழு நோக்கென்னுமிடம் மூதலிக்கப்படுகிறது.

39. ஸூத்ரகாரர்போக்கை நிரூபித்தல்.

ஜகத்காரண வஸ்துவாதிகளான வேதாந்த வாக்யங்களெல்லாம் ஸ்ரீமந் நாராயணனிடத்திலேதான் பர்யவஸிக்கின்றன என்று ஸூத்ரகாரர் தாமே ஸித்தாந்தம் செய்திருக்கிறாரென்பதை நன்கு நிரூபித்துக் காட்டுகிறோம். *அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா* என்று ப்ரஹ்ம விசாரத்தை ப்ரஸ்தாவித்து *ஜந்மாத்யஸ்ய

யத:* என்கிற அடுத்த ஸூத்ரத்தினாலே, 'எந்த வஸ்துவினிடத்தில் நின்றும் ஜகஜ் ஜந்ம ஸ்திதி லயங்கள் ஆகின்றனவோ அது ப்ரஹ்மம்' என்று ப்ரஹ்ம லக்ஷணம் காட்டினார் வியாஸர். வேதாந்தங்களில் ஜகத்காரண வஸ்துவைத் தெரிவிக்கின்ற வாக்யங்கள் ஒரே விதமாக இல்லை. பரஸ்பர விருத்தங்கள்போல் தோன்ற நின்றன என்பது பிரஸித்தமான விஷயம். ஏதோ ஒரு வஸ்து தான் ஜகத் காரணமாக இருக்க முடியுமே ஒழிய பல வஸ்துக்கள் அப்படியிருக்க முடியாதென்கிற நிச்சயம் ஆவச்யகமானது. பரஸ்பர விருத்தங்கள்போல் தோன்ற நின்ற காரண வாக்யங்களாலே இந்த நிச்சயம் எப்படி உண்டாகுமென்று தோன்றக்கூடிய சங்கையை ஸூத்ரகாரர் பரிஹரித்தேயிருக்கிறார். எப்படி பரிஹரித்திருக்கிறாரென்றால்—

### 40. பரிஹரித்துள்ள விதம்.

ஸகல காரணவாக்யங்களுக்கும் ஒற்றுமையைக் காட்டிப் பரிஹரித்திருக்கிறார் ஸாகாங்க்ஷ வாக்யங்களுக்கு நிராகாங்க்ஷ வாக்யங்களில் பர்யவஸானம் நியாயமென்பது யாவருமிசைந்ததொன்றாம். இதையே நெஞ்சில் கொண்ட வ்யாஸ மஹர்ஷியானவர் ஈக்ஷத்யதிகரணம் முதலானவற்றால் காரண வாக்யங்கள் எல்லாவற்றிற்கும் புருஷஸூக்தப்ரதிபாத்யனான நாராயணனிடத்தில் பர்யவஸாநத்தைக் காட்டியுள்ளார். இதுதன்னை இங்கு விளக்கமாக உபபாதிக்கிறோம்.

### 41. காரண வாக்யங்களில் ஸாகாங்க்ஷம் நிராகாங்க்ஷம் என்கிற பேதத்தை விவரித்தல்.

ஜகத்காரண வஸ்துவை ப்ரஸ்தாவிக்கின்ற வாக்யங்கள் காரண வாக்யமெனப்படும். அந்த வாக்யங்களை ஸாகாங்க்ஷ வாக்யங்களென்றும், நிராகாங்க்ஷ வாக்யங்களென்றும் இருவகையாகப் பிரித்துக்கொள்ள வேண்டியது முதற் காரியம். ஸாகாங்க்ஷ வாக்யங்களென்பவை தாமும் இரு வகையாயிருக்கும். 1. ஸாமான்ய சப்தத்தோடு கூடியிருந்து விசேஷ ப்ரதிபத்தியை அபேக்ஷித்திருக்குமவை. 2. அநுவாத ரூபமாய்க் கொண்டு புரோவாதத்தை அபேக்ஷித்திருக்குமவை-என்று. *ஸதேவ ஸோம்ய இதமக்ர ஆஸீத் ஏகமேவாத்விதீயம்*, *ஸேயம் தேவதைக்ஷத* இத்யாதி வாக்யங்களில் 'ஸத்' என்றும் 'தேவதா' என்றும் ஸாமான்ய சப்தங்களேயிருக்கையாலே இவை விசேஷ ப்ரதிபத்தி ஸாகாங்க்ஷங்களென்பது ஸ்பஷ்டம். *யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே* இத்யாதி வாக்யங்கள் யச் சப்த கடிதங்களாயிருப்பது பற்றி அநுவாத ரூபங்களாகையாலே புரோவாத ஸாகாங்க்ஷங்களென்பதும் ஸ்பஷ்டம். ஸாகாங்க்ஷ வாக்யங்களில் கீழ்ச்சொன்ன இரண்டு வகைகளைத் தவிர மூன்றாவது வகையும் ஒன்று உண்டு.

### 42. அர்த்தங்களில் யோக்யதையும் அயோக்யதையும்.

அயோக்யமான அர்த்தத்தைத் தெரிவிக்கும் வாக்யங்கள் யோக்யார்த்த ப்ரதிபத்தி ஸாகாங்க்ஷமாயிருப்பதே அது. ப்ரதர்தநவித்யையில் *மாமுபாஸ்வ ஏததேவாஹம் மநுஷ்யாய ஹிததமம் மந்யே* என்று இந்திரன் சொன்ன வாக்யம் போன்றவை இந்த வகுப்பில் சேரக் கடவன. ஆக மூவகுப்பாகப் பிரியலுற்ற ஸாகாங்க்ஷங்களான காரண வாக்யங்கள் வஸ்து விசேஷத்தை நிர்ணயிப்பதில் ஸ்வதந்திரமாக அசக்தங்களாகையாலே நிராகாங்க்ஷங்களான வாக்ய விசேஷங்களைக் கொண்டே வஸ்து விசேஷத்தை நிர்ணயிக்க வேண்டியதாகிறது. யோக்

யார்த்த விசேஷ ப்ரதிபாதகங்களாய்க் கொண்டு இதர வாக்யங்களை எதிர்பாராத வையான வாக்யங்களே நிராகாங்க்ஷ வாக்யங்களென்று தேறிற்று.

## 43. "ஏகோஹ வை நாராயண ஆஸீத்"

*ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேசாந:* இத்யாதி வாக்யங்களே அப்படிப்பட்டவை என்று ஸாரஜ்ஞர்கள் நிஷ்கர்ஷித்துள்ளார்கள். மேலே காட்டிய வாக்ய விசேஷத்தில் ஸாமாந்ய சப்தம் சேர்ந்திருக்கவில்லை. அநுவாத ரூபத்வமுமில்லை; அயோக்யரார்த்த ப்ரதிபாதநமுமில்லை. ஸத், ப்ரஹ்ம, ஆத்ம, தேவதா இத்யாதிகளான பதங்களிருந்தாலன்றோ ஸாமாந்ய சப்தம் சேர்ந்திருப்பதாக ஆகும். அவை இல்லையே, யச்சப்த கடிதமாயிருந்தாலன்றோ அநுவாத ரூபமாக ஆகும். அதுவுமில்லையே! அயோக்யார்த்த ப்ரதிபாதகத்வமில்லாமையோடு கூடின யோக்யார்த்த ப்ரபாதகத்வமே யுள்ளதென்பது நிரூபிக்கப்படவேண்டியதாக நிற்கையாலே அது நிரூபிக்கப்படுகிறது அடுத்தபடியாக.

## 44. ஈக்ஷத்யதிகரணத்தில் நாராயணனுக்கே ஜகத்காரணத்வம் விளக்கப்படுவது.

சாரீக மீமாம்ஸையில் சாஸ்த்ராரம்ப ஸமர்த்தநார்த்தமான சதுஸ்ஸூத்ரீ முடிந்ததும் ஐந்தாவது அதிகரணம் ஈக்ஷத்யதிகரணம். இதில் விசேஷித்துக் குறிக் கொள்ளத்தக்க ஸூத்ரங்கள் இரண்டு; *தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத்* கதிஸாமாந்யாத்* என்னுமிவை. ஸாதாரணமான ஸச்சப்தத்தையும் தேவதா சப்தத்தையும் கொண்டிருக்கிற ஸத்வித்யையானது புருஷஸூக்த ப்ரதிபந்நனான ஸ்ரீமந் நாராயணன் பக்கலிலே பர்யவஸிப்பதாக இவ்விரண்டு ஸூத்ரங்களாலும் காட்டப்படுகிறது. *தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத்* என்கிற ஸூத்ரத்தின் பொருளை முன்னம் தெரிந்துகொள்ளவேணும், 'தந்நிஷ்டஸ்ய' என்கிற விடத்துள்ளதான தச்சப்தத்தினால்—ஸூத்ரகாரர் கருதிய விஷய வாக்யத்திலுள்ள ஸச்சப்தவாச்யமான வஸ்து கொள்ளப்படுகிறது. ஆகவே, ஸத்தை உபாஸிப்பவனுக்கு என்பதாகப் பொருள் தேறிற்று. ஸத்தை உபாஸிப்பவனுக்கு முக்தி கிடைப்பதாக ஓதப்படுவதால் ப்ரக்ருத ஸச்சப்த வாச்யமான வஸ்து ப்ரதானமாக மாட்டாது என்றதாக ஸூத்ரார்த்தம் தேறும். 'ப்ரதாநந்தான் ஜகத் காரணம்' என்பவர்களை நிரஸிப்பதன்றோ ப்ரஸ்துதம். புருஷஸூக்தத்திலும் உத்தர நாராயணத்திலும் *தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி | நாந்ய: பந்தா அயநாய வித்யதே* என்றும், *நாந்ய: பந்தா வித்யதே அயநாய* என்றும் மோக்ஷோபாயமான உபாஸநத்திற்கு இலக்காகுந்தன்மை நாராயணனுக்கே ஓதப்பட்டுள்ளது. இந்த ஸத்வித்யா ப்ரகரணத்திலும் [அதாவது, சாந்தோக்யத்தில்] *ஆசார்யவாந் புருஷோ வேத; தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே* என்று ஸதுபாஸனமே மோக்ஷோபாயமாகச் சொல்லப்பட்டது. இந்த ச்ருதி வாக்யத்தின் பொருளாவது, எவனுக்கு உபதேஷ்டாவான ஆசார்யன் இருக்கிறானோ அவனே ப்ரஹ்ம வித்தாவான். சரம சரீரத்திலிருந்து விடுபடுமளவே அவனுக்குக் காலதாமதம்; சரம சரீரம் விழுந்தவுடனே ஸத்சப்த நிர்திஷ்டனாய் ஜகத் காரணபூதனான பரம புருஷனை அடைகின்றான். ஸதுபாஸன நிஷ்டனுக்கு சரீரம் விழுமளவு

தான் மோக்ஷப்ராப்தியில் தாமதம்: சரீரம் தொலைந்தவுடனே முக்தனாகிறான்—என்பதாம். இதனால் நாராயணனே ஸச்சப்த வாச்யனென்று அறுதியிடப்படுவதனால் ப்ரக்ருதமான ஸத்து ப்ரதானமன்று என்றதாக ஸூத்ர தாத்பர்யம் தேறுகிறது. *தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி* இத்யாதிகளான உதாஹ்ருத வாக்யங்களாலே நாராயணோபாஸனந்தான் மோக்ஷோபாய மென்று நிச்சயிக்கப்பட்டவளவில் *தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத்* என்று ஸூத்ர மியற்றின மஹர்ஷியானவர் நாராயணோபாஸகனையே விவக்ஷித்தாராகிறார் என்று நிர்ணயிப்பதில் தட்டுண்டோ?

45. தந்நிஷ்டஸ்யேத்யாதி ஸூத்ரத்தின் விவரணம்.

கீழே நாம் விவரித்த விஷயத்தில் பிறர் சொல்லக்கூடியது ஒன்றுண்டு; அதாவது; தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேச மாகிற ஹேதுவைக் கொண்டு ப்ரதாநம் ஜகத்காரணமன்று என்று நிரஸிப்பது மட்டுமே இங்கு ஸூத்ரகாரருக்கு உத்தேச்யமானது; நாராயணனே ஜகத்காரணபூதனென்று ஸ்தாபிப்பதில் இங்கு நோக்கே கிடையாது. சப்தத்தினால் கிடைப்பதற்கு மேற்படக் கொள்ளத்தகாது என்று.

46. (இதற்கு மறுப்பு) இங்ஙனம் சொல்வது தவறு, இதர ப்ரதிக்ஷேபத்தில் மட்டுமே ஸூத்ர தாத்பர்ய மென்று கொண்டால் ந்யூநதையாகும். இந்த வேதாந்த சாஸ்த்ரம் எதற்காக ஆரம்பிக்கப்பட்ட தென்று பார்க்க வேணும்; முமுக்ஷுவான வனை மோக்ஷோபாய பூதமான வஸ்துவை உபாஸிப்பதில் ப்ரவர்த்திக்கச்செய்வதன் பொருட்டு விசிகித்ஸை பற்ற ப்ரஹ்மஜ்ஞாநோத்பாதநத்தின் பொருட்டு சாஸ்த்ரம் ஆரம்பிக்கப்பட்டது. சாஸ்த்ராரம்பத்திற்குப் பலன் இதுதானென்பதை வேதாந்திகள் யாவரும் ஸமரூபமாக இசைந்தே தீருவர்கள். 'ஜகஜ் ஜந்மாதி காரணம் ப்ரஹ்ம' என்று ப்ரஹ்ம லக்ஷணம் சொல்லி ப்ரதாநாதிகள் ஜகத்காரணமன்று என்று கண்டித்த வளவில் விசிகித்ஸையற்ற ப்ரஹ்மஜ்ஞாநோத்பாதனம் செய்ததாக ஆய்விடுமோ? ஒருநாளுமாகாது. ப்ரஹ்ம ருத்ராதிகளிடையில் எந்த தேவதை ஜகஜ்ஜன்மாதி காரணம்? என்கிற விசிகித்ஸை பரிஹரிக்கப்படாத அளவில் நிஸ்ஸம்சய ப்ரஹ்மஜ்ஞாநோத்பாதநம் செய்யப்பட்டதாக ஆகமாட்டாதென்பதைப் பேதையருமறிவர். ஏவஞ்ச, இன்ன தேவதைதான் ஜகத்காரணமென்று நிஸ்ஸந்தேஹமாகத் தெரிவிக்கப்படாத அளவில் சாஸ்த்ராரம்ப ப்ரயோஜனம் தேறாமையாலே ந்யூநதைக்குப் பரிஹாரமே ஏற்படாது.

47. ஆகவே, ஜகத்காரண பூதப்ரஹ்ம சப்த வாச்யமான தேவதா விசேஷம் இன்னதென்று நிர்த்தாரணம் செய்வதிலும் சாஸ்த்ரம் தத்பரமானது என்று இசைந்து தீர வேண்டும். *தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத்* என்கிற ஹேதூக்தியின் ஸ்வாரஸ்யத்தினாலும் தேவதா விசேஷ நிர்ணயத்தை ஸூத்ரகாரர் செய்யக் கருதியுள்ளாரென்பது செவ்வனே விளங்கா நின்றது; மோக்ஷோபாய பூதமான வஸ்துவுக்கு உபாஸந விஷயத்வம் யாதொன்று இங்குச் சொல்லப்பட்டிரா நின்றதோ இது ப்ரதாநாதி ப்ரதிக்ஷேபக மாத்ரமேயன்று, தேவதா விசேஷ விஷயகத்வத்தை ஸாதிப்பதாகவுமாகின்றது. *தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி* என்கிற ச்ருதி வாக்கியத்திலுள்ளதான தச்சப்தமானது எந்த தேவதா விசேஷத்

தைச் சொல்லுகின்றதோ, அதனையே *தந்நிஷ்டஸ்ய* என்கிற ஸூத்ரத்திலுள்ள தச்சப்தமும் சொல்லக்கடவதென்பது திண்ணம். *வாஸுதேவ மநாராத்ய கோ மோக்ஷம் ஸமவாப்ஸ்யதி* என்பது முதலான பல ப்ரமாண வசனங்களை இங்கு அநுஸந்திப்பது.

48. ஆக, மோக்ஷ ஹேதுத்வமாகிற லிங்கத்தினால் ஸச் சப்தத்தின் பொருளை நிஷ்கர்ஷிப்பவரான வியாஸ முனிவர் தமது ஸூத்ரத்தில் நாராயணனையே கருதினாரென்பது நிச்சயம். ஸச்சப்த வாச்யன் நாராயணனே என்பது மற்றொரு ப்ரகாரத்தாலும் நிர்ணயிக்கத்தக்கதாம். அதாவது, புருஷ ஸூக்தத்திலும், உத்தர நாராயணத்திலும் *ஸர்வாணி ரூபாணி விசித்ய தீர: | நாமாநி க்ருத்வா அபிவதந் யதாஸ்தே* என்பதனால் நாமரூப வ்யாகர்த்தாவாக இருக்குந் தன்மை சொல்லப் பட்டது. இது ஸத்வித்யா ப்ரக்ரணத்திலும் "ஸேயம் தேவதா இமாஸ் திஸ்ரோ தேவதா அநேந ஜீவேநாத்மநா அநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரோத்" என்றோதப் பட்டிருப்பது. ஸச்சப்தவாச்யன் நாராயணனேஎன்பதற்கு ப்ரத்யபிஜ்ஞாபகமாம்.

49. *கதிஸாமாந்யாத்* என்கிற ஸூத்ர விவரணம்.

ஈக்ஷத்யதிகரணத்திலிருந்து மேலே நாமெடுத்துக் காட்டின இரண்டு ஸூத்ரங்களில் *தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத்* என்கிற முந்தின ஸூத்ரத்தைப் பற்றிச் சொல்லவேண்டுமவை சொன்னோம் கீழ்; இனி *கதிஸாமாந்யாத்* என்கிற அடுத்த ஸூத்ரத்தைப் பற்றிச் சொல்லுகிறோம். [கதிஸாமாந்யாத்.] கதியாவது ப்ரவ்ருத்தி; அதாவது அர்த்த போதகத்வம்; [ஸாமாந்யாத்] அது ஸமாநமாயிருக்க வேண்டியது ஆவச்யகமாகையாலே என்று பொருள். காரண வாக்யங்களெல்லாம் ஒரு மிடறாயிருக்கவேண்டுகையாலே என்றபடி. இது மிகவும் ஆவச்யகமானது. ஏவஞ்ச, *அத புருஷோ ஹ வை நாராயணோ காமயத*, *ப்ரஜாஸ் ஸ்ருஜேயேதி*, *ஏகோ ஹ வை நாராயண ஆஸீத்*, *ந ப்ரஹ்மா நேசாநோ நேமே த்யாவாப்ருதிவீ* இத்யாதிகளான உபநிஷத்வாக்யங்களில் நாராயணனுக்கே ஜகத்காரணத்வம் ஓதப்பட்டிருக்கையாலே ஸத்வித்யையிலுள்ள காரணவாசகங்களான ஸாமாந்ய சப்தங்களுக்கு [ஸச்சப்த தேவதா சப்தங்களுக்கு] நாராயணனென்கிற தேவதா விசேஷத்திலே பர்யவஸானமின்றிக்கே யொழிந்தால் காரணவாக்யங்களுக்கெல்லாம் ஐககண்ட்யம் ஸம்பவிக்கமாட்டாது. ஆகவே ப்ரக்ருதங்களான ஸச்சப்த தேவதா சப்தங்கள் நாராயணன் பக்கலிலே பர்ய வஸிக்கின்றனவாதலால் ப்ரதாநம் ப்ரக்ருத ஸச்சப்த வாச்யமன்று என்பதாக "கதிஸாமாந்யாத்" என்கிற ஸூத்ரத்திற்குப் பொருளாகத் தேறி நின்றது.

50. அதிகரணந்தோறும் விஷயவாக்யங்கள் நாராயண பரங்களேயென்று காட்டுதல்.

பல சொல்லி என்? ஸாரமாகச் சொல்லலாவதிவ்வளவே. ஸூத்ரங்களின் பொருளை நிர்வஹிப்பதற்கு உபநிஷத்துக்களிலிருந்து விஷயவாக்யங்கள் கொள்ளப்படுகின்றனவென்பது யாவருமறிந்ததே. சங்கர பாஷ்யத்திலும் ஸ்ரீ பாஷ்யத்திலும் பெரும்பாலும் விஷயவாக்யங்கள் வெவ்வேறாகக் கொள்ளப்படாமலிருப்பதைக் காண்கிறோம். அந்த விஷயவாக்யங்களிலெல்லாம் சொல்லப்படுகிற தன்மைகள் ஸ்ரீமந்நாராயணனுக்கே அஸாதாரணங்களென்பது ச்ருதிபுராணாதிகளில்

ப்ரஸித்தம்—என்கிற விதனையும் முக்கியமாகக் குறிக்கொள்க. ஆனந்தமயத்வம், ஆதித்ய மண்டலத்திலுள்ளிருத்தல், புண்டரீகாக்ஷத்வம், அபஹதபாப்மத்வம், மோக்ஷார்த்த உபாஸநவிஷயத்வம், அக்நி இந்திரன் முதலிய ஸர்வ தேவதைகளுக்கும் அந்தர்யாமியா யிருத்தல், ஸர்வ பூதங்களுக்கும் அந்தர்யாமியா யிருத்தல் இத்யாதிகளான தரும விசேஷங்களுக்கு இருப்பிடமான வஸ்துவே ஜகத்காரணமாகக்கூடியதென்று நிஷ்கர்ஷிக்கின்ற ஸூத்ரகாரருடைய உள்ளத்தில் ஸ்ரீமந் நாராயணனே உறைந்திருக்கின்றானென்பது பிராமாணிகர்களுக்கு அறிவரிதன்று. இனி, ஆதிசங்கராசாரியர் நாராயண பாரம்யத்தையே ஸ்தாபித்தவரென்பது இங்கு ப்ராஸங்கிகமாக நிரூபிக்கப்படுகிறது.

51. ஆதிசங்கராசார்யருடைய நாராயண பக்தியை விளக்குதல்.

பகவத்பாதர் இயற்றிய விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் தேவதாந்தரங்களுக்கு அவரத்வத்தை நிலை நாட்டி ஸ்ரீமந்நாராயணனுக்குப் பரத்வம் ஸ்தாபித்திருப்பது கதிராயிரமிரவி கலந்தெரித்தா லொப்பவிளங்கா நின்றது. விஷ்ணு ஸஹஸ்ர நாமத்திற்கு பாஷ்யம் செய்த பகவத் பாதர் சிவ ஸஹஸ்ர நாமத்திற்கு ஏன் பாஷ்யம் செய்யவில்லை? என்று வினவினால், "அப்போது சிவஸஹஸ்ரநாம ஸ்துதியில்லை; பிற்பட்ட காலத்தில் தான் அஃது உண்டாயிற்று; ஆதலால்தான் அதற்கு பாஷ்யம் செய்ய ப்ரஸக்தி யுண்டாகவில்லை" என்கிறார்கள். அது நிற்க.

52. சாங்கர ப்ரஹ்மஸூத்ர பாஷ்யத்தில் ஒரு விஷயம்.

பாஞ்சராத்ராகம ப்ராமாண்யாதிகரணத்தில், "உத்பத்த்யஸம்பவாத்" என்கிற ஸூத்ர பாஷ்யத்தில் "தத்ர பாகவதா மந்யந்தே" என்று தொடங்கி பாஞ்சராத்ராக்ம ப்ரமேயங்களான விஷயங்கள் மூன்றென்று ஸங்க்ரஹித்து, அவற்றுள் இரண்டு விஷயங்களில் தம்முடைய ஸம்மதியைக் காட்டி, மூன்றாவதான ஒரு விஷயத்தில் மட்டும் வைமத்யம் காட்டியுள்ளார், பகவத்பாதர், தமக்கு ஸம்மதமாகக் காட்டின இரண்டு விஷயங்கள் இவை;—(இங்கு அவருடைய பங்க்திகளையே உதாஹரிப்போம்). "தத்ர யத்தாவதுச்யதே யோஸௌ நாராயண: ப்ரஸித்த: பரமாத்மா ஸர்வாத்மா இதி, தத் ந நிராக்ரியதே. யதபி தஸ்ய பகவத: அபிகமநாதிலக்ஷணமாராதநம் அஜஸ்ரம் அநந்யசித்ததயா அபிப்ரேயதே, ததபி ந ப்ரதிஷித்யதே; ச்ருதி ஸ்ம்ருத்யோரீச்வரப்ரணிதாநஸ்ய ப்ரஸித்தத்வாத்" என்பன அவருடைய பாஷ்ய பங்க்திகள். இவற்றால், ஸ்ரீமந்நாராயணனுக்கே பாரம்ய ப்ரதிஷ்டாபனத்தில் பகவத் பாதர் ஊக்கமுடையவரென்பது மறக்கத்தக்கதன்று.

53. ஈச்வராதி ஸாமாந்ய சப்தங்களுள்ள விடங்களில் வாஸுதேவ நாராயணாதி விசேஷ சப்தங்களையிட்டு வியாக்கியானம் செய்யத் தொடங்கினவரும் பகவத் பாதரேயாவர். மேலே யெடுத்துக் காட்டின உத்பத்த்யஸம்பவாதிகரண பாஷ்ய பங்க்தியில் 'பகவதோ நாராயணஸ்ய அபிகமநாதிலக்ஷணமாராதநமஜஸ்ரம்' என்ற விடத்தில் [அநந்யசித்ததயா] என்றெழுதப்பட்டுள்ளதில் இதாநீந்தனர்கள் கண்மூடிகளாயிருக்கின்றனர். ருத்ராதிகளான அந்யர்களிடத்திலும் சித்தத்தை வைத்துச் செய்யப்படுகிற ஸ்ரீமந்நாராயணாராதநம் அநந்ய சித்தக்ருதமாக

எப்படியாகுமென்பதை அவர்கள் ஆலோசிக்க மாட்டிற்றிவர். நாராயணனைப் பரி வாரத்தோடுங்கூட ஆராதிப்பதும் சிந்திப்பதும் செய்தால் இது அநந்யசித்தத்வத் திற்கு விரோதமாகுமோ! என்று அவர்கள் கேட்கக்கூடும். ருத்ராதிகளிடத்தில் ஸ்ரீமந்நாராயணபரிவாரத்வப்ரதிபத்தி குறையற்றதாகில் குசலமேயாகும்.

**54. ஆதிசங்கராசார்யருடைய கீதாபாஷ்ய ஸூக்திவிசேஷங்களைக் காட்டுதல்.**

சங்கர பகவத்பாதர் விஷ்ணு பக்தரா? சிவ பக்தரா? என்று விசாரித்து நிர்ணயிக்க வேண்டுவது அவசியமானது. ச்ருதிதிஹாஸ புராணாதி ஸமஸ்த ப்ரமாண விசேஷங்களுள் பகவத்கீதையே முன்னணியில் நிற்கின்றதென்பதில் யார்க்கும் விவாதமிராது. எம்பெருமான்தானே சோதிவாய் திறந்து பணித்த தென்கிற மிக்க சிறப்பன்றோ இதற்குள்ளது. அப்பெருமான் ஸ்ரீமந்நாராயணனே யென்றும் ஸ்ரீமஹாவிஷ்ணுவே யென்றும் இதில் ஸகல வைதிகர்களும் ஏககண்டர்களே யாவர். இதில் விப்ரதிபத்தி கொண்ட வைதிகர் ஒருவருமிலர். இத்தகைய நூலில் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் பரத்வமும் தேவதாந்தரங்களின் அவரத்வமும் அடிக்கடி விளக்கப்பட்டுள்ளது.

55. பத்தாமத்யாயத்தில் (ச்லோ 8.) ‘அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ் ஸர்வம் ப்ரவர்த்ததே’’ என்றவிடத்தில் சங்கர பாஷ்யபங்க்தி இது காணீர்;-அஹம் பரம் ப்ரஹ்ம வாஸுதேவாக்க்யம், ஸர்வஸ்ய *ஜகத: ப்ரபவ:—உத்பத்தி:; மத்த ஏவ ஸ்திதிநாசக்ரியாபலோபபோக லக்ஷணம் விக்ரியாரூபம் ஸர்வம் ஜகத் ப்ரவர்த்ததே’’ இத்யாதி.

56. மூலத்தில் நாராயணபதமோ விஷ்ணு பதமோ காணப்படாத விடங்களிலெல்லாம் நியமேந விஷ்ணு நாராயண வாஸுதேவ பதங்களை யிட்டே பாஷ்யமியற்றுகிறார் பகவத்பாதர் என்பது வ்யபிசரியாத விஷயம்.

57. (9-22) அநந்யாச் சிந்தயந்தோமாம்’’ என்றவிடத்தில் பரம் தேவம் நாராயணம்...பர்யுபாஸதே—தேஷாம் பரமார்த்த தர்சிநாம்’’ என்று பாஷ்யமிட்டிருக்கின்ற பகவத்பாதர் பரதேவதையான நாராயணனை உபாஸிப்பவர்கள் யாவரோ அவர்களே உண்மையறிவாளிகள் என்று காட்டிருளாகிறார். ஸ்ரீமஹா விஷ்ணுவுக்குப் போல ருத்ரனுக்கும் பாரம்யமுண்டு என்கிற வாதத்தை ஸஹிப்பவரல்லர் பகவத்பாதர்.

58. ஸ்ரீமந்நாராயண வ்யதிரிக்த தேவதைகளை பஜிப்பவர்களைப் பற்றின ப்ரஸ்தாவம் கீதையில் இல்லாமற் போகவில்லை. (7-20) *காமைஸ் தைஸ் தைர் ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தே அந்யதேவதா:* என்று தொடங்கிச் சொல்லி வருகையில் *அந்தவத்து பலம் தேஷாம் தத்பவத்யல்பமேதஸாம்* என்று தலைக்கட்டப் பட்டுள்ளது. இந்த ச்லோகத்தின் பாஷ்யத்தின் முடிவில் பகவத்பாதர் எழுதியுள்ள வாக்கியம் பரம பக்தர்களை அவசமாகவே கண்ணீர் பெருக்க வைக்கின்றது.

59. அவ்விடத்திலுள்ள வாக்கியமிது காணீர்: *ஏவம் ஸமாநே அப்யாயாஸே மாமேவ ந ப்ரபத்யந்தே அநந்தபலாய; அஹோ கலு கஷ்டதரம் வர்த்ததே இத்யநு-க்ரோசம் தர்சயதி பகவான்* என்று. ஸ்ரீமந்நாராயணனை பஜிப்பவர்

களுக்கே அநந்தாக்ஷய பலன் பெறுவதற்கு அவகாசமுள்ளதென்று அறிந்தவர்களுங் கூட க்ஷுத்ர பலன்களை விரும்பி தேவதாந்தர பஜனம் செய்கிறார்களே! என்று பகவான் தானே கண்ணீர் விட்டழுது கதறுவதாக ஸாக்ஷாத் கரித்தன்றோ பகவத் பாதர் எழுதி யுள்ளார்

60. அதிலேயே பதினோராமத்யாயத்தில் விச்வ ரூபக் காட்சி என்பது அமைந்திருப்பதானது தேவதாந்தரங்களின் அவரத்வத்தைக் கையிலங்கு நெல்லிக் கனியாகக் காட்டுவதற்கேயன்றோ. அதில் மூன்றாவது ச்லோகத்தில்:—''பகவானே! நீயே பரமேச்வரனென்பது உண்மையே; அதைக் கட்கூடாகக் காண விரும்பு மெனக்கு உன்னால் வைஷ்ணவ ரூபத்தைக் காட்டிக் கொடுக்க முடியுமா? என்று அர்ஜுனன் தனது கருத்தை ஸூசிப்பித்தளவில் ''பச்யாதித்யாந் வஸூந்ருத்ராந் அச்விநௌ மருதஸ்ததா'' என்று தன்னுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தினேகதே சத்தி லொடுங்கியிருந்த ஸமஸ்த தேவர்களையும் காணுமாறு காட்டிக் கொடுத்தரு ளினன் ஸ்ரீமந்நாராயணன்.

61. அதன் பிறகு அக்கண்ணபிரானருளிய திவ்ய சக்ஷுஸ்ஸாலே கண்ட அர்ஜுனன் பச்யாமி தேவாந் தவ தேவ தேஹே'' என்று தொடங்கி ப்ரஹ்ம ருத்ராதி ஸகல தேவதா கணங்களையும் அத்திருமேனியில் காண்பதாகப் பேசினன். இதை இந்திரஜாலமென்று சொல்லாமையினாலே அத்வைதவாதம் அடியறுப்புண்டது.

62. தேவதாந்தர பாரம்ய வாதமோ நெடுந்தூரத்தில் தள்ளப்பட்டொழிந் தது. நாராயணனில் வேறுபட்டதொரு தேவதை இங்ஙனே விச்வரூபம் காட்டித் தன் பக்கலில் நாராயணன் நிலைநின்றிருக்கும் படியைக் காட்டிற்றுண்டோ? காட்டத் தான் முடியுமோ? *ருத்ராதித்யா வஸவோ யே ச ஸாத்யா விச்வேச்விநௌ மருதச்சோஷ்மபாச்ச, கந்தர்வ யக்ஷா ஸுரஸித்தஸங்கா வீக்ஷந்தே த்வாம் விஸ்மி தாச்சைவ ஸர்வே* என்னுமிந்த ச்லோகமானது விசேஷித்து ருத்ராதிகளின் அவ ரத்வத்தை அறுதியிடாநின்றதாயிற்று.

63. பகவத்பாத ஸூக்தி ஸாரமுணர்த்துதல்.

பகவத் கீதை ஆறாமத்யாயத்தில் முடிவான சுலோகமிது. *யோகிநாமபி ஸர்வேஷாம் மத்கதேநாந்தராத்மநா, ச்ரத்தாவாந் பஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத:* என்பது. இங்கு சங்கர பாஷ்ய பங்க்தி வருமாறு;—''யோகிநாமபி ஸர்வேஷாம் ருத்ராதி த்யான பராணாம். மத்கதேன-மயி வாஸுதேவே ஸமா ஹிதேன, அந்தராத்மனா அந்த: கரணேன, ச்ரத்தாவான்-ச்ரத்ததானஸ்ஸன், பஜதே-ஸேவதே யோமாம், ஸ மே-மம யுக்ததம: அதிசயேந யுக்த: மத:—அபிப் ரேத:'' என்று. இதற்கு விவரணம் அநபேக்ஷிதம். பக்ஷபாத மற்றவர்கள் நற் றெளிவு பெறுவர்கள்.

64. சங்கராசார்யருடைய ஸஹஸ்ர நாம பாஷ்ய ஸூக்திகள் காட்டுதல்.

பகவத்பாதர் ஸஹஸ்ர நாம பாஷ்யத்திலும் பல பல இதிஹாஸங்களை யெடுத்துக் காட்டி நாராயண பாரம்யத்தைத் திடப்படுத்தியுள்ளார். விஷ்ணு வின் தாழ்வையோ, தேவதாந்தரத்தின் உயர்வையோ ஓரிடத்திலும் அவர் காட் டினதில்லை.

65. கேசவநாம பாஷ்யத்தில் *கோ ப்ரஹ்மேதி ஸமாக்யாத ஈசோஹம் ஸர்வதேஹிநாம், ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவ நாமவாந்* என்று சொல்லிக் கொண்டே சிவபெருமான் இந்த கேசவ நாமத்தை ஸமர்ப்பித்த தாக ஹரிவம்சத்தில் சொல்லப்பட்டுள்ள இதிஹாஸத்தை உதாஹரித்துள்ளார் பகவத் பாதர்.

66. [அர்க்க:] என்னும் திருநாமத்தின் பாஷ்யத்தில் "ப்ரஹ்மாதிபி: பூஜ்யதமைரபி அர்ச்சநீயத்வாத் அர்க்க:"—என்ற விவரணம் காட்டினர். இங்கு ஆதி சப்தத்தால் முந்துற முன்னம் க்ரஹிக்கக்கூடியவர் பார்வதீபதியல்லவா? ஏன்? *ஸ ப்ரஹ்மா ஸ சிவ:* என்றோதுகிற வேத புருஷன் பிரமனுக்கடுத்தபடி சிவபிரானைச் சொல்லி வைத்திருப்பது பிரஸித்தமன்றோ?

67. [அமிதாசந:] என்னும் திருநாமத்தின் பாஷ்யத்திலும் "ஸம்ஹார ஸமயே விச்வமச்நாதீதி அமிதாசந:" என்று விவரித்தார் பகவத்பாதர். சிவபெருமான் விச்வ பக்ஷர்ப்பூதனல்லனே. *நளிர்மதிச் சடையனும் நான்முகக் கடவுளும்* என்கிற திருவாசிரியப் பாசுரமும் இங்கு நினைக்கத் தக்கது. ¤அத்தா சராசரக்ரஹணாத்¤ என்கிற ஸூத்திரத்தில் க்ருத்ஸ்நமான சராசரத்தையும் உண்டவனென்று நிர்ணயிக்கப்பட்ட நாராயணன் சிவபெருமானை விட்டிட்டானென்ன ப்ரஸக்தியில்லையே. உட்கொள்ளப்பட்டவர்களில் சிவபெருமானே முதல்வனென்பது பகவத் பாத ஸித்தாந்தம்.

68. ¤ஸர்வவாகீசீச்வரேச்வர:¤ என்கிற நாம பாஷ்யத்திலும் ¤ஸர்வேஷாம் வாகீச்வராணாம் ப்ரஹ்மாதீநாமபி ஈச்வர:¤ என்றார் அவர்தாமே.

69. நிர்குண ப்ரஹ்ம வாதத்தை நிராகரித்தல்.

பரப்ரஹ்மம் நிர்க்குணம் என்று பிறர் செய்யும் வாதம் மிகவும் வருந்தத் தக்கது. ஹேய குணமில்லாமையைத் தெரிவிக்க வேண்டி உபநிஷத்துக்கள் சில விடங்களில் ப்ரஹ்மத்தை நிர்குணமென்று சொல்லி யிருப்பதுண்டு. எண்ணிறந்த திருக்கல்யாண குணமுடைமையை ஓதியிருக்கின்ற ச்ருதிசதங்களுக்கு விரோதமின்றிக்கே நிர்வாஹம் செய்யவேண்டுமன்றோ? அங்ஙனே நிர்வஹிக்குமளவில் நிர்க்குண ச்ருதிகளுக்கு ஹேயகுணமில்லாமையைக் கூறுவதில் தாத்பர்யம் என்றே சொல்லித் தீரவேண்டும்.

70. ப்ரதாநம் முதலானவை ஜகத் காரணமாகக் கூடுமென்று நேர்ந்த சங்கைகளைப் பரிஹரியா நின்ற சாரீரக மீமாம்ஸையானது பெரும்பாலும் அதிகரணந் தோறும் பரப்ரஹ்மத்தினிடத்திலுள்ள திருக்குணங்களையெடுத்துக்கொண்டே 'அத்தகைய குணங்களில்லாத வஸ்துக்களுக்கு காரணத்வம் ஸம்பவிக்கமாட்டாது' என்று தலைக் கட்டுகின்றது.

71. இக்காலத்தவர்களான அத்வைதிகள் தங்கள் நூல்களில் "ஆதிசங்கராசாரியாரும் ஸகுணப்ரஹ்மத்தையும் ஒப்புக்கொண்டிருப்பதுண்டு" என்றெழுதுகிறார்கள். இங்ஙனே யெழுதுமவர்களுக்கு அவ்யவஸ்தித சித்தத்வம் தவிர வேறொன்றும் தேறாது.

72. நையாயிகர்கள் "உத்பந்நம் த்ரவ்யம் க்ஷணம் அகுணம் திஷ்டதி" என்பர்கள். பரப்ரஹ்மத்திற்கு உதபத்தி ஒப்புக்கொண்டாலாவது அது க்ஷணகாலம் நிர்க்குணமாக இருக்கவுமாகும்.

73 முமுக்ஷுக்களும் முக்தர்களும் நித்யர்களுமான ஸமஸ்த ஜீவராசிகளையும் தன்னுடைய குணாநுபவத்தினாலேயே உஜ்ஜீவிப்பிக்குமதான பரப்ரஹ்மம் க்ஷண மாத்ரமும் நிர்க்குணமாக இருக்ககில்லாது.

74. கூரத்தாழ்வானருளிச் செய்த ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தில் *தூரே குணாஸ் தவ து ஸத்வரஜஸ்தமாம்ஸி தேந த்ரயீ ப்ரதயதி த்வயி நிர்க்குணத்வம், நித்யம் ஹரே நிகில ஸத்குணஸாகரம் ஹி த்வாமாமநந்தி பரமேச்வரமீச்வராணாம்* என்றுள்ள ச்லோக ரத்நம் இங்கு நித்யாநுஸந்தேயமாகக் கடவது.

75. நாமெழுதி வெளியிட்டுள்ள ஸ்ரீவைகுண்ட ஸ்தவ வியாக்கியானத்திலிருந்து சில பங்க்திகளை உதாஹரித்தே இதன் பொருளுணர்த்துகிறோம்; (நமது வியாக்கியான பங்க்திகள்)

நிர்குண ச்ருதிகளுக்கு என்ன கதியென்ன; அவற்றை நிர்வஹிக்க வேண்டும் வழி காட்டுகிறாரிதில் ☼நிர்குணம் நிரஞ்ஜநம்☼ இத்யாதி ச்ருதிகள் எம்பெருமான் பக்கலிலே குணங்களின் அத்யந்தாபாவத்தைச் சொல்லுகின்றனவல்ல. அப்படியாகில் ☼யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்☼ இத்யாதிகளான பரச்சத வாக்யங்களினால் எம்பெருமானுக்குச் சொல்லப்பட்ட குணபௌஷ்கல்யம் வ்யாஹதமேயாகும். ஒரு ச்ருதியும் வ்யாஹதார்த்தமாகாதபடி நிர்வஹிக்க வேண்டுமே. நிர்க்குணத்வத்தைச் சொன்னவிடம் ஹேயகுணராஹித்யத்தைச் சொல்லிற்றாகக் கொள்ளுமளவில் ஒரு விரோதமுமில்லையே. உத்ஸர்க்காபவாத ந்யாயம் இதற்குக் கை கொடுக்குமே. ☼[ஸத்வ ரஜஸ் தமாம்ஸி குணாஸ் தவ தூரே ☼[ஸத்வ ரஜஸ் தமோ குணங்கள் தேவரீருக்கு நெடுந்தூரத்திலுள்ளன. எம்பெருமான் பக்கலில் ரஜஸ்தமோ குணங்கள் இல்லையென்று சொல்லலாமத்தனை போக்கி ஸத்வகுணமும் இல்லையென்று சொல்லலாமோவென்று ஒரு சங்கை தோன்றும். ☼பரம ஸத்வ ஸமாச்ரய: க:☼ என்னும்படியுள்ள எம்பெருமான் பக்கலில் ஸத்வ குணமில்லை யென்னப்போகாது: ரஜஸ்தமோமிச்ரமான ஸத்வகுணமில்லை என்கிற தத்தனை. [தேந த்ரயீ ப்ரதயதி த்வயி நிர்க்குணத்வம்] அதையிட்டே வேதத்தில் நைர்குண்ய வாதம் ப்ரவ்ருத்தமாயிற்று. குண ஸாமான்யாபாவத்தையே ச்ருதி விவக்ஷிக்கிறதென்ன வொண்ணாதோவென்னில்; ஒண்ணாமையை உபபாதிக்கிறது உத்தரார்த்தம் [நித்யம் ஹரே! நிகில ஸத்குண ஸாகர மிதயாதி] ☼பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச☼ ஸத்யகாமஸ் ஸத்யஸங்கல்ப:☼ இத்யாதி ச்ருதிகள் எம்பெருமானை ஸகல கல்யாண குண நிதியாக ஓதாநிற்க, அதற்கு முரணாகப் பொருள் கொள்ள வொண்ணாதிறே. ☼அக்நீஷோமீயம் பசுமாலபேத☼ இத்யாதிகளில் விஹிதமான ஹிம்ஸையைத் தள்ளியன்றோ ☼மா ஹிம்ஸ்யாத் ஸர்வ பூதாநி☼ இத்யாதி நிஷேத ச்ருதிகளுக்குப் பொருள் நிர்வஹியா நின்றோம். அது போல வென்க.

### 76. இதரர்களின் ஸர்வாத்மநா ப்ரமாண வைதேசிகத்வம்

முக்கியமாகக் குறிக்கொண்மின்; "பாஞ்சராத்ரம் அப்ரமாணம்" என்கிற பிறர் உபநிஷத்துக்கள் ப்ரஹ்மஸூத்ரங்கள் இதிஹாஸ புராணங்கள் முதலியவற்றை ப்ரமாணமாக ஒப்புக்கொள்பவர்கள்போலும். இது வாங்மாத்ரேண அங்கீகாரமே யொழிய வேறில்லை. "பாஞ்சராத்ரத்தை ப்ரமாணமாக வொப்புக்கொண்டால் என்ன ஹாநி விளைந்திடும்? ச்ருதீதிஹாஸ புராண ஸூத்ரங்களை ப்ரமாணமென்று ஒப்புக்கொண்டதனால் என்ன லாபம் விளைந்திட்டது? என்று இவர்களை வினவினால் இவர்கள் என்ன விடையிறுப்பர்களோ, பார்க்கவேணும்.

77. "வேத: ப்ராசேதஸாதாஸத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா" என்று வேத ப்ராதுர்ப்பாவ விசேஷமாகக் குலாவப்படுகிற ஸ்ரீராமாயணத்தில் ஆதியோடந்தமாகத் திருக்கல்யாண குணகண ப்ரஸ்தாவமே விளங்கா நின்றது. வான்மீகி முனிவர் தம்மிடம் வந்து சேர்ந்த நாரத மஹர்ஷி பக்கலில் கதை கேட்க விரும்பிற்றிலர்; திருக்குணங்கள் கேட்கவே விருப்பத்தை வெளியிட்டார்.



78. அதில், "கோ ந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே குணவாந்" என்றும் "பஹவோ துர்லபாச் சைவ யே த்வயா கீர்த்திதா குணா:" என்றும் உபக்ரமத்தில் காணும் வினாவிடைகளில் இஃது அறியலாகும்.

79. எம்பெருமானுடைய திருவவதாரங்களெல்லாம் குணபரீவாஹ ரூபங்களென்று ஸாரஜ்ஞர்கள் நிஷ்கர்ஷித்துள்ளார்கள். எம்பெருமான் ஸ்வாத்மாவிலே நிரம்பியுள்ள திருக்குணங்களை வெளியிட்டுத் தரிப்பதற்காகவே திருவவதாரங்கள் செய்கிறானென்கை. ஸ்ரீராமக்ருஷ்ணாதி ரூபேண திருவவதரித்து வேதஸித்தங்களும் ஸ்வாபாவிகங்களுமான திருக்குணங்களை ஸகல பக்தர்களும் அநுபவிக்கும்படி செய்தருளினன் பகவான்' இதை 'அறியாதாரில்லை. 'ப்ரஹ்மம் குண சூந்யமே' என்பவர்கள் ஸ்ரீராமாயணம் முதலான இதிஹாஸ புராணங்களுக்கும் அவற்றுக்கு மூலமான ச்ருதிகளுக்கும் நெடுந்தூரத்திலிருக்கத் தக்கவர்களென்பது அதிவாதமுமன்று, ஆக்ரஹ வார்த்தையுமன்று.

80. "இதிஹாஸ புராணாப்யாம் வேதம் ஸமுபப்ர்ம்ஹயேத்" என்று பொதுவாகவும் "வேதோபப்ரும்ஹணார்த்தாய தாவக்ராஹயத ப்ரபு:" என்று சிறப்பாகவும் சொல்லியுள்ள மஹர்ஷிகள் வேதப் பொருள்களே இதிஹாஸ புராணங்களில் வெட்ட வெளிச்சமாகக் காணப்படுகின்றனவென்று ப்ரதிஜ்ஞை செய்தவர்களாவர்.

81. ஆக, திருக்குணங்களிலேயே நோக்காகத் திருவவதரித்த வேதங்களுக்கும் தது உபப்ரும்ஹணங்களுக்கும் சிறிதும் பொருந்தாதபடி நிர்குணப்ரஹ்மவாதம் செய்பவர்களைப்பற்றி இன்னமும் பேச வேண்டியதொன்றுமில்லையென்று தலைக்கட்டி நிற்கின்றோம்.

82. எம்பெருமானார் நிஷ்கர்ஷித்தருளின வேதார்ந்தப் பொருள்களெல்லாம் ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளை அவலம்பித்தேயாதலால் அடுத்தபடியாக அதனை விவரிப்போம். அது அடுத்த இதழில் வரும். ... ... ...

ஸ்ரீபகவத் ராமாநுஜ ஸித்தாந்தஸாரம் முற்றுப்பெற்றது.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

——:o:——

ஸ்ரீமதே நிகமாந்தமஹாகுரவே நம:

# தேசிக ஸம்ப்ரதாய வித்வான்களுக்கு விண்ணப்பம்

கீழே விஜ்ஞாபித்த ஸ்ரீபகவத் ராமாநுஜ ஸித்தாந்த ஸாரத்தில் ஸ்ரீராமாநுஜ தர்சனத்தைச் சேர்ந்த ஸகலார்த்தங்களும் நிரூபிக்கப்பட்டு முடிந்துவிடவில்லை. தென்னாசார்ய ஸம்ப்ரதாயஸித்தாந்தப் பொருள்களென்று குலாவப்படுகிற அர்த்த விசேஷங்களும் பகவத்ராமாநுஜ ஸித்தாந்தத்திற்கு உள்ளீடானவையே. அதுமட்டுமன்று; தேசிக நிவ்யஸூக்தி ஸித்தங்களுமாம். பெரும்பாலும் பிள்ளை லோகாசார்யருடைய ஸ்ரீஸூக்திகளை அடியொற்றியே ஸ்ரீதேசிகன் அருளிச்செய்த அர்த்தங்கள் தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்களென்று சொல்லிக்கொள்ளும் இதாநீந்தனர்களுக்கு அனேகமாக ஹேயங்களேயல்லது உபாதேயங்களல்ல என்பதை அடியேன் நூற்றுக் கணக்கான நூல்களில் முக்கியமாகவும் ப்ராஸங்கிகமாகவும் உபபாதித்திருக்கிறேனென்பது உலகப்ரஸித்தம்,

(ஆண்டவர் ஸந்நிதியில் அந்தரங்க விஜ்ஞாபனம்) என்று வெளிவந்துள்ள ஒரு சுவடியை வியாஜமாகக் கொண்டு பலா பலநிந்தைக் கடிதங்களை நிச்சலும் நமக்கு எழுதிவருகிறார்கள். "பிறர் பெயரால் வெளிவருகின்ற புத்தகங்களெல்லாம் உன்னுடைய சூதுகளே" என்று இதையே மாற்றி மாற்றி யெழுதிவருகிறார்கள். ஸந்தோஷம். அப்படியே ஒப்புக்கொள்ளுகிறோம். அதிலுள்ள விஷயங்களெல்லாம் நம்முடையவையே என்பதில் விவாதமுண்டோ? அவற்றில் ஒரு விஷயத்திற்குக் கூட ஒருவராலும் மறுப்புரைக்க முடியாதென்பதையும், பிராமாணிகமாக யார் மறுப்புரைத்து விட்டாலும் அவர்க்கு நாம் அடிமைப்படக் கடவோமென்பதையும் இற்றைக்கும் எற்றைக்கும் சபதம் செய்யத் தடையில்லை.

எதிர்த்தலையில் வித்வான்களுக்கு துர்ப்பிக்ஷமில்லை, (சாஸ்த்ரீய) விஷயங்களுக்கே துர்ப்பிக்ஷமென்றும், விவாதாஸ்பத விஷயங்களுக்கெல்லாம் ஆர்ஜவத்துடன் மறுப்பு வெளியிடுமவர்களின் முன்னிலையில் என்னுடைய ஸகல நூல்களையும் கிழித்தெறிந்து அவர்களுக்குத் தொண்டனாயிருக்கக்கடவேனென்றும் பலகால் நாம் வெளியிட்டிருப்பதை தென்னாடும் வடநாடும் வாசியற அறிந்துள்ளது. வீணாக நிந்தைக் கடிதங்களை நித்யமும் எழுதிக்கொண்டு த்ருப்தியடைபவர்கள் அடைந்திடுக. "அந்த வகுப்பில் படித்தவர்களில்லையா?" என்கிற நமது கட்டுரையே வெற்றிபெறும்.

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள்வாழி அருளிச் செயல்வாழி
தாழ்வாதுமில் குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்யவவர்களுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறைதன்னுடனே சேர்ந்து.

# பக்த ஹஸ்த பூஷணம்

ஸ்ரீகாஞ்சீபுரியில் அநுபவிக்கும் மஹோத்ஸவங்களுக்குப் பட்டியல்

பரிதாவி ஸூ சித்திரை மீ

13—4—72 வியாழன். வருஷப்பிறப்பு

10—4—72 முதல் 19—4—72 } எம்பெருமானாருத்ஸவம்

22—4— ,, சனி. ஸ்ரீராமநவமி

26—4— ,, பு. திருவவதாரம்

18—4— ,, முதல் 27—4— ,, } மதுரகவிகள் அனந்தாழ்வான்

28—4— ,, வெ. சித்ரா பௌர்ணமி

30—4— ,, ஞா. தோட்டவுத்ஸவம்

வைகாசிமீ

19—5— ,, வெ. கடைவெள்ளி

24—5— ,, பு. ஆழ்வார் திருநாள்

25—5— ,, முதல் 3—6— ,, } வைகாசித் திருநாள் நம்மாழ்வார் 18—5—72 முதல் 27—5—72 வரை

4—6— ,,
5—6— ,,
6—6— ,, } விடாயாற்றி

7—6— ,, முதல் ( வஸந்தோத்ஸவம்
13—6— ,, வரை ) 7 நாள்

ஆனிமீ

15—6—72 முதல் ( கோடையுத்ஸவம்
21—6—72 வரை ) 7 நாள்

22—6—72 ஆனிகருடன் பெரியாழ்வார்

13—6— ,, முதல் ( வடக்குத்திருவீதிப்
22—6— ,, வரை ) பிள்ளை யுத்ஸவம் 10 நாள்

15—6— ,, முதல் ( ஸ்ரீமந் நாதமுனிகள்
24—6— ,, வரை ) உத்ஸவம் 10 நாள்

ஆடிமீ

26—7— ,, பு. ( ஆடிகருடன் கஜேந்திர ) மோக்ஷம். ஆளவந்தார்

2—8— ,, முதல் ( திருவாடிப்பூரம்
11...8... ,, வரை ) 10 நாள்

12...8... ,, ச. ஆண்டாள் ஊர்வலம்

ஆவணிமீ

24...8... ,, முதல் ( பவித்திர உத்ஸவம்
30...8... ,, வரை ) 7 நாள்

1...9... ,, வெ. ஸ்ரீஜயந்தி

23...8... ,, முதல் ( பெரியவாச்சான்பிள்ளை
1...9... ,, வரை ) யுத்ஸவம்

2...9... ,, ச. உறியடியுத்ஸவம்

புரட்டாசி

10—9—72 முதல் ( நிகமாந்த மஹாகுரு
19—9—72 வரை ) உத்ஸவம்

7—10—72 முதல் ( நவராத்திரி
16—10—72 வரை ) மஹாநவமி

ஐப்பசி

17—10— ,, செ. விஜயதசமி

4—11— ,, ச. தீபாவளி

1—11—72 முதல் ( மணவாளமாமுனிகள்
10—11—72 வரை ) உத்ஸவம்

11—11— ,, ச. சேனையர்கோன்

4—11— ,, ( பொய்கையாழ்வார்
13—11— ,, ) உத்ஸவம்

14—11— ,, செ. பூதத்தாழ்வார்

15—11— ,, பு. பேயாழ்வார்

கார்த்திகை

21—11— ,, செ. ( திருக்கார்த்திகை
) திருமங்கையாழ்வார்

12—11— ,, முதல் ( நம்பிள்ளையுத்ஸவம்
21...11... ,, வரை )

22—11— ,, பு. திருப்பாணாழ்வார்

5—12— ,, செ. விசேஷோத்ஸவம்

மார்கழி

6—12— ,, முதல் (
15—12— ,, வரை ) பகற்பத்து

16—12— ,, முதல் ( பெரிய திருவத்யய
25— 1— ,, வரை ) நோத்ஸவம்

26—12— ,, செ. இயற்பாசாத்துமுறை

27—12— ,, பு. } திருப்பல்லாண்டு
தொடக்கம்
[அனுஷ்டான குளம்]

2—1—73 செ. ( தொண்டரடிப்பொடி
) யாழ்வார்

4...1...73 முதல் ( ஆண்டாள்
13...1...73 வரை ) நீராட்டவுத்ஸவம்

13...1...73 போகி திருக்கல்யாணம்

14...1...73 தைமாத ஸக்ரமணம்

15...1...73 சீவரம்பார்வேட்டை

18...1...73 முதல் (
20...1...73 வரை ) தெப்பவுத்ஸவம்

21—1—73 ஞா. தையில்மகம்

24—1—73 பு. கூரத்தாழ்வான்

3—2—73 ச. வனபோஜனம்

10—2—73 ச. ரதஸப்தமி

12...2... ,, பு. தென்னேரி தெப்பம்

17...2... ,, பு. ராய்ஜீகுளத்தெப்பம்

18...2... ,, முதல் ) தவன உத்ஸவம்
20...2... ,, வரை ( 3 நாள்

3...3... ,, முதல் ( திருக்கச்சிநம்பிகள்
12...3... ,, வரை ) 10 நாள்

13...3... ,, முதல் ( பங்குனியுத்தரம்
19...3... ,, வரை ) 7 நாள்

20...3... ,, செ. ஊர்வலம்

24...3... ,, முதல் ( பல்லவோத்ஸவம்
30...3... ,, வரை ) 7 நாள்

3...4... ,, ச. உடையார்பாளையம்

4...4... ,, பு. ஸம்வத்ஸராதி

சித்திரை

13...4... ,, ப்ரமாதீச வருஷப் பிறப்பு.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்



நியூடில்லியில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமான் உவே. Г. A. திருவேங்கடாசாரியர் ஸ்வாமிக்கு (10—12—1971ல்) ஸ்ரீபெரும்பூதூரில் ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவம் நடைபெற்றதுபற்றி ஸ்ரீராமாநுஜன் 280ல் வெளியிட்டிருந்தோம். அந்த ஸந்தர்ப்பத்துத் திருவுருவப் படம் இது காணீர். நித்யஸ்ரீர் நித்யமங்களம்.



சென்னை எழும்பூர் வேதவிலாஸ். ஸ்ரீமதுபயவே. (அட்வொகேட்) V. N. வெங்கடவரதாசார்ய ஸ்வாமியின் கடைசி திருக்குமாரனான ஸ்ரீமாந். சிரஞ்சீவி நாராயணனுக்கு 9—2—72 தேதியன்று திருவல்லிக்கேணியில் நடைபெற்ற விவாஹமஹோத்ஸவக் காட்சி.







# உபாலம்ப ஸ்ரீமுகங்களுக்கு உத்தரம்.

'வசவுக் கடிதங்களுக்கு பதில்' என்றெழுதாமல் 'உபாலம்ப' ஸ்ரீமுகங்களுக்கு உத்தரம்' என்று மகுடமிட்டது பற்றி முன்னம் சில வார்த்தைகள் விஜ்ஞாபிக்கிறேன். உண்மையான கையெழுத்திடாமலும், சிறுமாணாக்கர்கள் எழுதுவதுபோல் காட்டியும் க்ராம்யமான நிந்தோக்திகளை நிரப்பியும் எழுதப்படுகிற கடிதங்கள் சில மாதங்களாய் அடிக்கடி நமக்குக் கிடைத்து வருகின்றன. உண்மையில் அவை சிறு மாணாக்கர்களாலெழுதப்பட்டவையல்ல. ஆசார்யகம் செய்கிற பெரியோர்களாலெழுதப்பட்டவையென்பது ஸ்பஷ்டமாக விளங்குகின்றது. ஸ்ரீமுகம் என்று மதிக்கக் கூடிய பத்திரிகைகளை அநுக்ரஹிக்குமவர்களேயாவர் அவர்கள். விஷயமென்னவென்றால்,

ஆறேழு மாதங்களுக்கு முன்பு ஸ்ரீமதாண்டவன் திருவடி ஸம்பந்தியான திருமங்கலம் ஸ்வாமியொருவர் "ஆண்டவன் ஸன்னிதியில் அந்தரங்க விஜ்ஞாபனம்" என்றொரு புத்தகத்தை மதுரையில் அச்சிட்டு வெளியிட்டிருந்தார். அந்தப் புத்தகத்தை ஆதியோடந்தமாகப் பார்க்குமளவில் அதிலுள்ள வாக்கியங்கள் பெரும்பாலும் அடியேனுடைய நூல்களில் உள்ளவையே இடையிடையே சிற்சில வாக்கியங்கள் அவருடையவையாக இருக்கலாம். பல நூல்களில் அடியேனெழுதியுள்ள பூர்வபக்ஷங்களையெழுதிவிட்டு "இப்படியெழுதுகிறான்; ஒரு பாபி" "என்கிறான் ஒரு மஹா பாபி" என்றித்தகைய பல சாபமொழிகளை அடுக்கியிருக்கிறார் அந்த திருமங்கலம் ஸ்வாமி.

உள்ளடங்காத வருத்தத்தினால் தாம் இப்படியெழுதியிருப்பதாகவும் அவர் அதில் அடுத்தடுத்துக் காட்டியுள்ளார். இதன் மேல் ப்ராமாணிகர்கள் செய்யவேண்டிய காரியம் என்னவென்றால், அந்தந்த பூர்வபக்ஷ வாக்கியங்களையெடுத்தெடுத்து அவற்றின் உண்மையான பொருள்களை விளக்கி (இதற்கு அபார்த்தம் கொண்டது அநீதி) (இதற்குத் தப்பர்த்தம் கொண்டது தவறு) (இங்கு மயங்கினதுமருள்)...... என்றிப்படி விவேகிகளும் வித்வான்களும் உகக்கும்படியாக எழுதி வெளியிட்டிருக்க வேண்டும். இது ஸம்பிரதாய முறையில் காலக்ஷேபம் செய்த ப்ராஜ்ஞர்கள் செய்ய வேண்டிய காரியமாகும். அது செய்ய இயலாமல் ஸம்பிரதாய மார்க்கத்தில் பிரவேச லேசமுமில்லாதவொருவரைத் தூண்டி ஏதோ எழுதுவித்து மூன்றாவது நாளிலேயே முடித்துக்கொண்டார்கள். அரசாணிபாலை வேங்கடாத்வரி லக்ஷ்மீஸஹஸ்ரத்தில் "சுண்டிகஷாயநிஷேவணம்" என்றொரு த்ருஷ்டாந்தமிடுகிறார். அதாவது, கட்டபாறையை விழுங்கினவன் சுக்குக்கஷாயமருந்துமாபோலேயென்றபடி. எந்த பூர்வபக்ஷத்துக்கு எந்த நபர் ஸமாதானம் சொல்லுவதென்று விவேகியாமல் எவரும் எதிலும் கை வைப்பதுண்டோ? விஷய ஸ்வாபாவ்யத்தால் பங்கம் விளைந்தால் அதற்கு உபாலம்பமேயோ ப்ரதிக்ரியை? அருணோதயத்தில் தாலிகட்டி ஸூர்யோ.

இப்போது ஆங்காங்கு ஆசார்ய பீடத்திலமர்ந்து க்ரந்தகாலக்ஷேபம் செய்து போருகிற மஹநீயர்களை அடிபணிந்து ஸவிநயமாகவே விஜ்ஞாபிக்கிறேன். பரம கருணையுடன் பணித்தருளவேணுமென்று ஜிஜ்ஞாஸுவாகவே விஜ்ஞாபிக்கிறேன். திருமங்கலம் ஸ்வாமி வெளியிட்ட அந்தரங்க விஜ்ஞாபனத்தில் கண்ட பூர்வபக்ஷங்கள் பெரும்பாலும் அடியேனுடைய பல நூல்களிலிருந்து காட்டப்பட்டவையென்று விஜ்ஞாபித்தேன். புந: புநரபி விஜ்ஞாபயே. அந்த பூர்வ பக்ஷங்களுக்கு ப்ராமாணிக

ப்ராஜ்ஞர்கள் பொறுமையுடன் ஸமாதானமருள வேண்டும் உபாலம்ப ஸ்ரீமுகங்களினுல் அடியேன் சிறிதும் விக்ருதியடையேன் அவற்றை உச்சிமேல் வைத்து மெச்சுகின்றேன். அடியேனுள்ளத்துள் நெடு நாளாக ஊறியிருக்கின்ற சங்கைகளுக்குப் பரிஹாரம் பெறுமல் இந்த வாழ்நாள் முடிவுபெறலாகாது என்கிற அபிஸந்தியொன்றேயுள்ளது. அடிக்கடி கிடைத்து வருகிற உபாலம்ப ஸ்ரீமுகங்களில் "உன் செருக்கையடக்க ஸம்ப்ரதாயஸமாராதனமென்கிற ஸ்ரீகோசம் வந்துகொண்டேயிருக்கிறது" என்றும் "யதார்த்த ராமானுஜன் அவதரித்தாய்விட்டது; பங்கமடைந்தொழிந்தாய்" என்றும் இங்ஙனே பலபல எழுதப்பட்டுள்ளது. அந்த ஸ்ரீகோசங்கள் 31-3-72 வரையில் நமக்குக் கிடைக்கவில்லை. ஸ்வாகதம் கூறிக்கொண்டேயிருக்கிறோம் இன்னும் பலபல அர்த்தவிசேஷங்கள் உலகில் பிரசுரமாகவேண்டியிருப்பதால் வெளிவரப்போவதாக அவரவர்கள் தெரிவிக்கும் ஸ்ரீகோசங்களைக் குதூஹலத்தோடு ப்ரதீக்ஷித்தேயிருக்கின்றேன்.

உலகமறியச் சொல்லுகிறேன் கேண்மின்.* ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் இதிமந்தைரிதம் ப்ரோகிதம் ஸ்ரீமத் சப்தவிரோதத: - தர்சிதம்' குருஸாஹஸம் இத்யாதியான குருதரஸாஹஸத்தைப் பற்றியும், "த்ருடபூர்வச்ருதோ மூர்க்க...... என்கிற தசையாம்" இத்யாதியைப் பற்றியும் ஸ்ரீமத் பரமஹம்ஸ. கோழியாலம் ஸ்வாமி தாம் விடையிறுக்க எழுந்து சில மாதங்களில் ஓய்ந்து நின்ற பிறகு அவருடைய அந்தேவாஸிகள் மும்மிரமாக எழுந்து வசனக்ருத்ய விமர்சம் முதலான சில சிறுசுவடிகளையெழுதி அவற்றுக்கும் உடனுக்குடனே விடைகள் பெற்று அவர்களும் ஓய்ந்து நின்றார்கள். திருமங்கலம் ஸ்வாமி இவற்றையெல்லாம் கிளப்பினர், ஸ்ரீமதாண்டவன் ஸ்வாமி ஒரு நிமித்த விசேஷத்தையிட்டு வியாக்கியானத்தோடு ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம் அச்சிடப்போவதாக விளம்பரம் செய்திருந்தபடியால், ஏற்கனவே வெளிவந்துள்ள பூர்வபக்ஷங்களுக்கெல்லாம் ஸமாதானம் வெளியிடவேண்டியது முதற்காரியமென்று தெரிவித்தார்.

உண்மையில் அவர் விரும்புகிறபடி ஸமாதானங்கள் வெளிவரவேண்டியது மிகவும் அவசியமே. 'அதற்கு வழியில்லையென்பதை உள்ளபடி நாம் அறிவோம். பல விருதுகளை இட்டுக்கொண்டிருக்கிற ப்ரபல வித்வான்கள் திகழுமிக்காலத்தில் வெளிவரவில்லையென்றால் பின்னை எப்போதுதான் வெளிவரும்?

அதற்கு வழியில்லாமல் உபாலம்ப ஸ்ரீமுகங்களையெழுதியனுப்புவதனுல் என்னுகும்.

## ஆசாரியரும் அந்தரங்க வித்வான்களும்.

(புஷ்யோத்ஸவத்தில் ஸம்பாஷணை)

*ஆசாரியர்—* வித்வான்களே! அந்தரங்க விஜ்ஞாபனத்தை ஆராய்ச்சி செய்யச் சொல்லியிருந்தேனே; ஆராய்ந்தீர்களா?

*வித்வான்கள்—* நன்கு ஆராய்ந்தோம். ஆராய்ச்சியில் தேறின விஷயங்களை விஜ்ஞாபிக்கவே விடைகொண்டிருக்கிறோம். ஒவ்வொரு விஷயத்தைப் பற்றியும் ஒவ்வொருவராகச் சொல்லுகிறோம்.

ஜநார்தநாசார்— ரஹஸ்யரத்நாவளியில்

"ஸ்ரீமானான நாராயணனொருவனுமே ஸர்வ ஜீவர்களுக்கும் தஞ்சம்......ஸர்வ ஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரியபிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க்கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள்"

என்கிற இந்த ஸ்ரீஸூக்தியும் சதுச்ச்லோகீபாஷ்யத்திலிருந்து காட்டியுள்ள நாலைந்து ஸூக்திகளும் நமக்கு உபாதேயமாக வழியேயில்லையே.

ஜகன்னாதாசார்—

"வேரிமாறாத பூமேலிருப்பாள்வினை தீர்க்குமே" "நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங்கொண்டு "உன் திரு" "திருவுக்குந்திரு" "தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு"

இத்யாதி ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரயஸாரஸூக்திகள் திருக்கண் வளர்ந்துகொண்டே எழுதியவையாகத் தோன்றுகிறதேயொழிய வேறில்லை. இவரால் என்ன ஸாதிக்க விரும்புகிறாரென்பது தெரியவில்லையே.

அம்மாளாசார்— "அலமேஷா பரித்ராதும் ராக்ஷஸ்யோ மஹதோபயாத்" இத்யாதிகளை அடுக்கியிருப்பதும் ஸ்வப்நபாஷிதங்களென்றே தோன்றுகிறது.

அப்பளாசார்—

ஆளவந்தாரருளிய நிஜகர்மாதி பக்த்யந்த மித்யாதியான கீதார்த்த ஸங்க்ரஹச்லோகத்தின் பாஷ்யத்திலே ஸ்வாமி தேசிகன்.

"ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தரபாவி பலஸாதநத்வ அநுபபத்திதர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயத்வ புத்திரபி ஸ்யாத் இதி பாவ: அந்தத: தைஸ் தை ராராதிதோ பகவாநேவ ஹி ஸர்வத்ர உபாய:" என்றது நமக்கு நஞ்சல்ல.

பத்மநாபாசார்—ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில்

"கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத் என்கிறபடியே ஜீவனுக்கு கர்த்ருதவம் ப்ராமாணிகமே யாகிலும் இது பராதீனமுமாய் அல்பவிஷயமுமாய் ப்ரதிஹதியோக்யமுமாயிருக்கும். ஆகையால் இவன்தான் உபாயாநுஷ்டானம் பண்ணிற்றும் வரத! தவ கலு ப்ரஸாதாத்ருதே சரணமிதி வசோபி மே நோதியாத் என்று சொல்லுகிறபடியே அவன் கடாக்ஷமடியாக வருகையால் அவனாலே ப்ரேரிதனாய், அவன் கைகரியாதபோது நீட்ட முடக்கமாட்டாதே அவன் கொடுத்த கரணகளேபரங்களைக் கொண்டு அவன் காட்டின வுபாயத்தை அவன் துணை

செய்ய அநுஷ்டித்து அவனால் கொடுக்கப்படுகிற பலத்துக்கு சாதகம் போலே அன்னுந்திருக்கிற விவனை ஸ்வாதீந ஸர்வ விஷய அப்ரதி ஹத கர்த்ருத்வ முடையவனோடே துல்யமாக இரண்டாம் ஸித்தோபாய மாக வெண்ணுகை விவேகியான முமுக்ஷுவுக்கு உசிதமன்று....¤ ¤என்னுணர்விலுள்ளே யிருத்தினேன் அதுவுமவனதின்னருளேயென் றும் ¤இசைவித்தென்னையுன் தாளிணைக் கீழிருந்து மம்மானே யென் றுஞ் சொல்லுகிறபடியே உபாய பூதனை அவன் செய்விக்கச் செய் கிற வ்யாஜமாத்ரத்தை அவனோடொக்க உபாயமாக வெண்ணுகை உசிதமன்றென்று ஏக சப்தத்துக்கு தாத்பர்யம்"

இந்த ஸ்ரீஸூக்தியின் முன்னிலையில் நம்மவர்களின் ஸம்ரம்பங்கள் காசுக்கு முதவா தென்பதை உலகமுணர்ந்தேயுள்ளது.

ஆசாரியர்— போதும் போதும்; போய்வாருங்கள் ஓம் சாந்திச் சாந்திச் சாந்தி:

ஸ்ரீவஷ்ணவதாஸன்.

Released by Maran's Dog ,Toronto, Canada

